# ப்ரச்நோத்தர ரத்நமாலிகா

[ப்ரச்நம்: கேள்வி. உத்தரம்: பதில். வினா - விடைத் தொடராக மணியான கருத்துக்களைக் கோத்துத் தருவதால் இந்நூல் "ப்ரச்நோத்தர ரத்நமாலிகா" எனப்படுகிறது.]

**க: க2லு நாலங்க்ரியதே**
**த்3ருஷ்டாத்3ருஷ்டார்த2 ஸாத4நபடீயாந் ।**
**அமுயா கண்ட2ஸ்தி3தயா**
**ப்ரச்நோத்தர ரத்நமாலிகயா ॥** 1

இஹபர ச்ரேயஸ்ஸை அடைய சாமர்த்தியமுள்ள யார் தாம் இந்த ப்ரச்நோத்தர ரத்நமாலிகையைக் கழுத்திலே கொண்டு (அதாவது இதை ஓதி) இதனால் அலங்கரிக்கப்படவில்லை?

(இம்மை மறுமை நலன்களைப்பெற விரும்புபவர் 'ப்ரச்நோத்தர ரத்ந மாலிகை'யை ஓதி உணர்ந்தால் பயனுறுவர் என்பது கருத்து. மனப்பாடம் செய்து ஒப்பிப்பதை'கழுத்தில்கொள்வது' ('கண்டஸ்தம்') என்பர். மாலை யையும் கழுத்தில் தானே அணிவர்?)

**ப4க2வந் கிமுபாதே3யம்?**
**கு3ருவசநம். ஹேயமபிச கிம்? அகார்யம் ।**
**கோ கு3ரு:? அதி4க3தத்வ:**
**சிஷ்யஹிதாயோத்3யதஸ் ஸததம் ॥** 2

**கே:** - ஸ்வாமி, கிரகித்துக்கொள்ள வேண்டியது என்ன?
**ப:** - குரு வசனம்.
**கே:** - தள்ள வேண்டியது என்ன?
**ப:** - அகார்யம். (செய்யத்தகாதது. அதாவது செய்யத்தகாதது என குரு கூறுபவை.)
**கே:** - குரு யார்?
**ப:** - உண்மையை அறிந்தவர். தம்மை அண்டின சிஷ்யர்களின் க்ஷேமத்துக்காக இடைவிடாமல் பாடுபடுபவர்.

[கே: = கேள்வி. ப: = பதில்.]

**த்வரிதம் கிம் கர்தவ்யம்**
**விது3ஷாம்? ஸம்ஸாரஸந்ததிச்சே2த3: ।**
**கிம் மோக்ஷதரோர் பீ3ஜம்?**
**ஸம்யக்3ஜ்ஞாநம் க்ரியா ஸித்3த4ம் ॥** 3

**கே:** - அறிவுள்ளவன் துரிதமாகச் செய்யவேண்டியது என்ன?
**ப:** - ஸம்ஸாரத் தொடரைக் கத்தரித்தல். (செத்துச் செத்துப் பிறக்காமல் மோக்ஷமடைவது.)
**கே:** - மோக்ஷ மரத்துக்கு விதை எது?
**ப:** - உள்ளதை உள்ளபடி அறிந்து (ஸத்ய தத்வஞானம் பெற்று) காரியத்தில் காட்டுவது.

**க: பத்4யதரோ? த4ர்ம:**
**க: சுசிரிஹ? யஸ்ய மாநஸம் சுத்3த4ம் ।**
**க: பண்டி3தோ? விவேகீ**
**கிம் விஷம்? அவதீ4ரணா கு3ருஷ ॥** 4

**கே:** - எது பத்தியம்? (ஹிதமானது.)
**ப:** - தர்மம்.
**கே:** - இங்கு (இவ்வுலகில்) எவன் சுத்தன்?
**ப:** - எவன் மனம் சுத்தமாக இருக்கிறதோ அவன்.
**கே:** - எவன் பண்டிதன்?
**ப:** - விவேகி. (விவேகத்தையுடையவன். நித்யமான ஆத்மா எது? அநித்யமான பிற யாவை? என்ற பாகுபாடு அறிவதே விவேகம்.)
**கே:** - எது விஷம்?
**ப:** - பெரியோர் வார்த்தையை அலட்சியம் செய்வது.

**கிம் ஸம்ஸாரே ஸாரம்?**
**ப3ஹுசோ(அ)பி விசிந்த்யமாநமித3மேவ ।**
**கிம் மநுஜேஷ்விஷ்டதமம்?**
**ஸ்வபரஹிதாயோத்3யதம் ஜந்ம ॥** 5

**கே:** - ஸம்ஸாரத்தில் ஸாரம் எது?
**ப:** - அடிக்கடி இதை நினைத்துக் கொண்டிருப்பதே. (ஸம்ஸாரத்தில் ஸாரம் எது என்று ஆராய்ந்து கொண்டே இருப்பதனால் அதில் பற்றுவிட்டுப் பிறப்பறுக்கலாம்.)
**கே:** - மனிதர்கள் விரும்பத்தக்கதில் தலை சிறந்தது எது?
**ப:** - தான், பிறர் இரண்டு பேரின் க்ஷேமத்திற்காகவும் ஈடுபடும் ஜன்மம்.

**மதி3ரேவ மோஹஜநக:**
**க:? ஸ்நேஹ:, கே ச த3ஸ்யவோ? விஷயா: ।**
**கா ப4வவல்லீ? த்ருஷ்ணா,**
**கோ வைரீ? யஸ்த்வநுத்3யோக3: ॥** 6

**கே:** - கள்போல் மயக்கத்தை உண்டு பண்ணுவது எது?

**ப:** - பற்றுதல். (ஆசை, சிநேகம்.'சிநேகம்'என்றால் எண்ணெய் போல் ஒட்டிக் கொள்ளுதல்.)

**கே:** - திருடர்கள் யார்?

**ப:** - (இந்திரியங்களை இழுத்துக்கொண்டு போகும்) விஷயங்கள் (எனும் புல நுகர்ச்சிக்கான வஸ்துக்கள்.)

**கே:** - ஸம் ஸாரக் கொடி எது?

**ப:** - (தாஹம் போன்ற) ஆசை வேட்கை,

**கே:** - சத்துரு யார்?

**ப:** - சோம்பேறித்தனமே.

**கஸ்மாத் ப[4]யமிஹ? மரணாத்,**
**அந்தா[4]தி[3]ஹ கோ விசிஷ்யதே? ராகீ[3] । 1**
**க: சூரோ? யோ லலநா**
**லோசநபா3ணைர் ந ச வ்யதி4த: ॥** 7

**கே:** - இங்கு (உலகில்) எல்லோரும் பயப்படுவது எதனிடம்?

**ப:** - மரணத்தினிடம்.

**கே:** - குருடனைக்காட்டிலும் குருடன் யார்?

**ப:** - ஆசையுள்ளவன்.

**கே:** - சூரன் யார்?

ப: - ஸ்தீரிகளின் பார்வைகளான பாணங்களால் அடிபடாதவன்.

**பாதும் கர்ணாஞ்ஜலிபி[4]:**
**கிமம்ருதமிஹ யுஜ்யதே? ஸது[3]பதேச: ।**
**கிம் கு[3]ருதாயா மூலம்?**
**யதே[3] ததத்ப்ரார்த[2]நம் நாம ॥** 8

**கே:** - காதாகிய அஞ்சலி (செவியின் கேள்விக்குழாய்க்கு அஞ்சலி என்று பெயர். இரண்டு கைகளையும் சேர்த்துக் குவித்துக் கொள்வது போலக் காது குவிந்திருப்பதனால் அஞ்ஜலி எனப்படுகிறது.)யால் சாப்பிடக்கூடிய அமிருதம் எது?

**ப:** - ஸாதுக்களுடைய உபதேசம்.

**கே:** - மதிப்புக்கு மூலம் எது?

**ப:** - ஒருவனிடமும் எதையும் வேண்டா திருத்தல்.

**கிம் க3ஹநம்? ஸ்த்ரீ சரிதம்,**
**க: சதுரோ? யோ ந க[2]ண்டிதஸ் தேந ।**
**கிம் து:க[2]ம்? அஸந்தோஷ:,**
**கிம் லாக[4]வம்? அத[4]மதோ யாச்ஞா ॥** 9

**கே:** - மர்மமானது எது?

**ப: -** பெண்களின் நடத்தை.
**கே: -** ஸமர்த்த ன் யார்?
**ப: -** (பெண்களின் நடத்தையினால்) இதனால் வஞ்சிக்கப்படாதவன்.
**கே: -** துக்கம் யாது?
**ப: -** திருப்தியின்மை.
**கே: -** கீழ்மை யாது?
**ப: -** கீழ்ப்பட்டவனிடத்தில் யாசிப்பது.

**கிம் ஜீவிதம்? அநவத்$^{3}$யம்,**
**கிம் ஜாட்$^{3}$யம்? பாட$^{2}$தோ(அ)ப்யநப்$^{3}$யாஸ: ।**
**கோ ஜாக$^{3}$ர்தி? விவேகீ,**
**கா நித்$^{3}$ரா? மூட$^{4}$தா ஜந்தோ ॥** 10

**கே: -** (உயர்ந்த) ஜீவனம் யாது?
**ப: -** குற்றமின்மை. (மாசு இல்லாத நடத்தை.)
**கே: -** அறிவின்மை யாது?
**ப: -** கற்றதையும் (நடைமுறையில்) பழகாமலிருத்தல்.
**கே: -** விழிப்புடையோன் எவன்?
**ப: -** விவேகமுள்ளவன்.
**கே: -** உறக்கம் யாது?
**ப: -** ஜீவர்களது மூடத்தன்மை.

**நலிநீத$^{3}$லக$^{3}$தஜலவத்**
**தரலம் கிம்? யௌவநம் த$^{4}$நம் சாயு: ।**
**கத$^{2}$ய புந: கே சசிந:**
**கிரணஸமா:? ஸஜ்ஜநா ஏவ ॥** 11

கே: - தாமரையிலைத் தண்ணீர் போல நிலையில்லாதவை எவை?
ப: - இளமை, செல்வம், ஆயுள் என்பன.
கே: - சந்திரகிரணம் போன்றவர் (பிறருக்கு ஹிதம் செய்பவர்) யார் எனச் சொல்லவும்.
ப: - நன்மக்களே.

**கோ நரக:? பரவசதா,**
**கிம் ஸௌக்$^{2}$யம்? ஸர்வஸங்க$^{3}$விரதிர் யா ।**
**கிம் ஸாத்$^{4}$யம்? பூ$^{4}$தஹிதம்,**
**ப்ரியம் ச கிம்? ப்ராணிநாம் அஸவ: ॥** 12

கே: - நரகம் யாது?
ப: - பிறர் வசமாயிருத்தல்.
கே: - ஸௌக்கியம் யாது?

ப: - ஸர்வஸங்க பரித்யாகம். (எல்லாத் தொடர்புகளையும் துறப்பது.)
கே: - ஸாதிக்கத்தக்கது யாது?
ப: - ஜீவர்களுக்கு ஹிதம் செய்தல்.
கே: - பிராணிகளுக்கு பிரியமுள்ளது யாது?
ப: - பிராணன்.

**கோ(அ)நர்த2ப2லோ? மாந:,**
**கா ஸுகதா? ஸாது4ஜநமைத்ரீ ।**
**ஸர்வவ்யஸநவிநாசே**
**கோ த3க்ஷ :? ஸர்வதா3 த்யாகீ3॥** 13

**கே:** - எது அநர்த்தத்தைத் தரும்?
**ப:** - மானம் (மானாபிமானமான அஹம்பாவம்.)
**கே:** - எது ஸுகத்தைத் தரும்?
**ப:** - நல்ல மனமுள்ளவர்களின் சிநேகம் (ஸத்ஸங்கம்).
**கே:** - எல்லாத் துக்கத்தையும் தொலைப்பதில் எவன் கெட்டிக்காரன்?
**ப:** - யாவற்றையும் தியாகம் செய்பவன்.

**கிம் மரணம்? மூர்க3த்வம்,**
**கிம் சாநர்க4ம்? யத3வஸரே த3த்தம் ।**
**ஆமரணாத் கிம் சல்யம்?**
**ப்ரச்ச2ந்நம் யத் க்ருதம் பாபம் ॥** 14

**கே:** - மரணம் எது?
**ப:** - அறிவின்மை.
**கே:** - விலை மதிக்கவொண்ணாதது எது?
**ப:** - ஸமயத்தில் செய்யும் தானம் (உதவி).
**கே:** - சாகும் வரையில் (ஈட்டி போல்) குத்துவது எது?
**ப:** - ரகஸ்யத்தில் செய்த பாபம்.

**குத்ர விதே4யோ யத்நோ?**
**வித்3யாப்4யாஸே, ஸதெ3ளஷதே4 தா3நே ।**
**அவதீ4ரணா க்வ கார்யா?**
**க2லபரயோஷித்பரத4நேஷு ॥** 15

**கே:** - எதற்காகப் பிரயத்தனம் செய்ய வேண்டும்?
**ப:** - வித்தியாப்பியாஸம், நல்ல மருந்து, தானம் செய்தல் இவற்றுக்காக.
**கே:** - அலக்ஷ்யம் செய்யவேண்டியது எது?
**ப:** - கெட்டவர்கள்; பிறருடைய மனைவி; பிறருடைய பொருள்.

**கோ(அ)ஹர்நிசமநுசிந்த்யா?**
**ஸம்ஸாராஸாரதா, நது ப்ரமதா[3] ।**
**கா ப்ரேயஸீ விதே[3]யா?**
**கருணா தீ[3]நேஷு ஸஜ்ஜநே மைத்ரீ ॥** 16

**கே: -** இராப்பகல் நினைக்க வேண்டியது எது?
**ப: -** ஸம்ஸாரத்தில் சாரம் இல்லை என்பது. பெண்ணல்ல.
**கே: -** பிரியமாகச் செய்யவேண்டியது எது?
**ப: -** தீனர்களிடத்தில் கருணையும், ஸாதுக்களிடத்தில் சிநேகமும்.

**கண்ட[2]க[3]தைரப்யஸுபி[4]:**
**கஸ்ய ஹ்யாத்மா ந சக்யதே ஜேதும்**
**மூர்க[2]ஸ்ய சங்கிதஸ்ய ச**
**விஷாதி[3]நோ வா க்ருதக்[4]நஸ்ய ॥** 17

**கே: -** பிராணன் போவதாக இருந்தாலும், எவனுடைய ஆத்மாவை நல்வழிப்படுத்த முடியாது?
**ப: -** அறிவீனன், சந்தேகப்ராணி, அழுமூஞ்சி, நன்றியில்லாதவன் ஆகியவர்கள்.

**க: ஸாது[4]:? ஸத்[3]வ்ருத்த:,**
**கமத்[4]மமாசக்ஷதே? த்வஸத்[3]வருத்தம் ।**
**கேந ஜிதம் ஜக[3]தே[3]தத்?**
**ஸத்யதிதிக்ஷாவதா பும்ஸா ॥** 18

**கே: -** ஸாது யார்?
**ப: -** நல்ல நடத்தையுடையவன்.
**கே: -** எவன் அதமன்?
**ப: -** கெட்ட நடத்தையுடையவன் தான்,
**கே: -** இந்த உலகை எவரால் வெல்லமுடியும்?
**ப: -** ஸத்தியமும், திதிக்ஷையும் இருப்பவரால். (எதிரெதிர் அநுபவங்களை சம நிலையில் தாங்கும் பொறுமைத் திறனே திதிக்ஷை.)

**கஸ்மை நமாம்ஸி தே[3]வா :**
**குர்வந்தி? த[3]யாப்ரதா[4]நாய ।**
**கஸ்மாது[3]த்[3]வேக[3]ஸ் ஸ்யாத்?.**
**ஸம்ஸாராரண்யத: ஸுதிய[4]: ॥** 19

**கே: -** எவனைத் தேவர்களும் கும்பிடுகிறார்கள்?
**ப: -** தயை உடையவனை.
**கே: -** எதைக்கண்டு நடுங்க வேண்டியது?
**ப: -** ஸம்ஸாரமாகிய காட்டைக்கண்டே நல்லறிவினர் நடுங்குவர்.

**கஸ்ய வசே ப்ராணிக3ண:?**
**ஸத்யப்ரியபா4ஷிணோ விநீதஸ்ய ।**
**க்வ ஸ்தா2தவ்யம்? ந்யாய்யே**
**பதி2 த்3ருஷ்டாத்3ருஷ்டலாபா4ட்4யே ॥** 20

**கே:** - ஜீவராசிகள் எவனுக்கு வசமாகும்?
**ப:** - ஸத்யமும் பிரியமுமான வசனமுடைய விநயமுள்ளவனுக்கு.
**கே:** - நிற்கவேண்டியது எங்கே?
**ப:** - காணப்படுவனவும், காணப்படாதனவுமாகிய (இஹபர) லாபங்கள் நிரம்பிய நியாயமான வழியில்.

**கோ(அ)ந்தோ? யோ(அ)கார்யரத:**
**கோ ப3தி4ரோ யோ ஹிதாநி ந சருணோதி ।**
**கோ மூகோ? ய: காலே**
**ப்ரியாணி வக்தும் ந ஜாநாதி ॥** 21

**கே:** - குருடன் யார்?
**ப:** - கெட்ட காரியத்தில் களிப்பவன்.
**கே:** - செவிடன் யார்?
**ப:** - ஹிதத்தைக் கேட்காதவன்.
**கே:** - ஊமை யார்?
**ப:** - இனிமையான வார்த்தைகளைச் சரியான காலத்தில் சொல்ல அறியாதவன்.

**கிம் தா3நம்? அநாகாங்கக்ஷம்,**
**கிம் மித்ரம்? யோ நிவாரயதி பாபாத் ।**
**கோ(அ)லங்கார.? சீலம்,**
**கிம் வாசாம் மண்ட3நம்? ஸத்யம் ॥** 22

**கே:** - தானம் யாது?
**ப:** - கேட்காமல் கொடுத்தல்.
**கே:** - சிநேகிதன் யார்?
**ப:** - பாவத்திலிருந்து தடுப்பவன்.
**கே:** - எது அலங்காரம்?
**ப:** - சீலம்.
**கே:** - வாக்கிற்கு அழகு எது?
**ப:** - ஸத்யம்.

**வித்3யுத்3 விலஸிதசபலம்**
**கிம்? துர்ஜநஸங்க3திர் யுவதயச்ச ।**
**குலசீலநிஷ்ப்ரகம்பா:**
**கே கலிகாலேபி? ஸஜ்ஜநா ஏவ ॥** 23

**கே:** - மின்ன லொளிபோல் சஞ்சலமானவை யாவை?
**ப:** - துர்ஜனரின் ஸங்கமமும், ஸ்திரீகளும்.
**கே:** - கலிகாலத்திலும் குலசீலத்திலிருந்து சலிக்காதவர் (பிறழாதவர்) யார்?
**ப:** - ஸத்புருஷர்களே.

**சிந்தாமணிரிவ துர்லப4ம்**
**இஹ கிம்? கத2யாமி தச்சதுர்ப4த்3ரம் ।**
**கிம் தத்3 - வத3ந்தி பூ4யோ?**
**விதூ4ததமஸோ விசேஷேண ॥** 24

**தா3நம் ப்ரியவாக்ஸஹிதம் ஜ்ஞாநமக3ர்வம்**
**க்ஷமாந்விதம் சௌர்யம் ।**
**வித்தம் த்யாக2ஸமேதம்**
**துர்லப4மேதத் நதுர்ப4த்3ரம் ॥** 25

**கே:** - சிந்தாமணிபோல் துர்லபமானது (கிடைத்தற்கரியது) எது?
**ப:** - சதுர்பத்ரம் (நான்கு சுபப் பொருட்கள்.)
**கே:** - அந்தச் சதுர்பத்ரம் என்ன வென்று அறிஞர் சொல்லுகின்றனர்?
**ப:** - பிரியவாக்குடன் செய்யும் தானம், கர்வமில்லாத ஞானம், க்ஷமையுடன் (க்ஷமிக்கும் பண்புடன்) கூடிய சூரத்தனம், தியாகத்துடன் கூடிய செல்வம்.

**கிம் சோச்யம்? கார்பண்யம்,**
**ஸதி விப4வே கிம் ப்ரசஸ்தம்? ஔதா3ர்யம் ।**
**க: பூஜ்யோ வித்வத்பி4:?**
**ஸ்வபா4வத: ஸர்வதா3 விநீதோ ய: ॥** 26

**கே:** - பரிதாபப்படத்தக்கது எது?
**ப:** - கார்ப்பண்ணியம். (கருமித்தனம். தனக்குமில்லாமல், பிறருக்குமில்லாமல், கத்துக்குமில்லாமல், பரத்துக்குமில்லாமல் சேர்த்துவைத்துக்கொண்டிருத்தல்.)
**கே:** - செல்வச் செழிப்பு ஏற்பட்டக்கால் எது புகழுக்குரியது?
**ப:** - உதாரகுணம். (வாய்மை.)
**கே:** - அறிவுடையோரால் யார் பூஜிக்கப்படுவர்?
**ப:** - இயல்பாகவே எப்பொழுதும் வணக்கமுள்ளவரை.

**க: குலகமலதி2நேச:?**
**ஸதி கு3ணவிபவே(அ)பி யோ நம்ர: ।**
**கஸ்ய - வசே ஜக3தே3தத்?**
**ப்ரியஹித வசநஸ்ய த4ர்மநிரதஸ்ய ॥** 27

**கே:** - எந்தச் சூரியனைக் கண்டால் நம் குலமான தாமரை ஆனந்தத்துடன் பிரகாசிக்கும்?

ப: - குணங்கள் பரிபூர்ணமாக விருந்தும், விநயத்துடன் இருப்பவன்.
கே: - இந்தப் பிரபஞ்சம் யாருக்கு வசப்படும்?
ப: - பிரியமாக இத வாக்கு சொல்பவனாகவும், தர்மத்தை அனுஷ்டிப்பவனாகவும் இருப்பவனுக்கு.

**வித்³வந்மநோஹரா கா?**
**ஸத்கவிதா - போ²த⁴வநிதா ச ।**
**கம் ந ஸ்ப்ருசதி விபத்தி:?**
**ப்ரவ்ருத்³த⁴ வசநா - நுவர்த்திநம் தா³ந்தம் ॥** 28

கே: - வித்வான்களின் மனத்தைக் கவர்பவள் யார்?
ப: - நற்க விதைக் கன்னியும் - ஞான மடந்தையும்.
கே: - விபத்து எவனைத் தீண்டாது?
ப: - பெரியோர் வார்த்தையை யனுஸரித்து நடப்பவனையும், அடக்கமுள்ள வனையும்.

**கஸ்மை ஸ்ப்ருஹயதி கமலா?**
**த்வநலஸசித்தாய நீதிவ்ருத்தாய ।**
**த்யஜதி ச கம் ஸஹஸா? த்3விஜ**
**கு³ருஸுர நிந்தா³கரம் ச ஸாலஸ்யம் ॥** 29

கே: - லக்ஷ்மி யாரை விரும்புவாள்?
ப: - சோம்பாத சித்தமும், நீதிப்படியான நடத்தையுமுடையவனை.
கே: - எவனை விரைவில் விட்டு விலகுவாள்?
ப: - பிராம்மணன், குரு, தேவர் ஆகியோரை நிந்திப்பவனையும், சோம்பல் உடையவனையும்.

**குத்ர விதே⁴யோ வாஸ:?**
**ஸஜ்ஜநநிகடே(அ)த²வா காச்யாம் ।**
**க: பரிஹார்யோ தேச:?**
**பிசுநயுதோ லுப்³த⁴பூ⁴பச்ச ॥** 30

கே: - வாசஞ் செய்யவேண்டியது எங்கே?
ப: - நல்லவர்களுடைய சமீபத்தில் அல்லது காசி க்ஷேத்திரத்தில்.
கே: - விட்டு விலக வேண்டிய தேசம் யாது?
ப: - கீழ்மக்களுள்ளதும், லோ பியான அரசனுடையதுமான தேசம்.

**கேநாசோச்ய: புருஷ:?**
**ப்ரணதகலத்ரேண தீ⁴ரவிப⁴வேந ।**
**இஹ பு⁴வநே க: சோச்ய?**
**ஸத்யபி விப⁴வே ந யோ தா³தா ॥** 31

**கே:** - எதனால் மனிதன் துக்கமில்லாதவனாவான்?
**ப:** - வணக்கமுள்ள மனைவியினாலும், நிலையுள்ள செல்வத்தாலும்.
**கே:** - இவ்வுலகில் விசனிக்கப்படத் தக்கவன் எவன்?
**ப:** - பொருளிலிருந்தும் எவன் கொடையாளியாயில்லையோ அவன்.

**கிம் லகு4தாயா மூலம்?**
**ப்ராக்ருதபுருஷேஷு யா யாச்ஞா ।**
**ராமாத2பி க: சூர:?**
**ஸ்மரசரநிஹதோ ந யச்சலதி ॥** 32

**கே:** - இகழ்ச்சிக்குக் காரணம் எது?
**ப:** - தாழ்ந்தவர்களிடம் யாசிப்பது.
**கே:** - ஸ்ரீராமனைவிட சூரன் யார்?
**ப:** - மன்மத பாணங்கள் அடித்தாலும் தன்னிலை தவறாதவன்.

**கிமஹர்நிசமநுசிந்த்யம்?**
**ப4க3வச்சரணம் ந ஸம்ஸார: ।**
**சக்ஷுஷ்மந்தோப்யந்தா4:**
**கே ஸ்யு:? யே நாஸ்திகா மநுஜா: ॥** 33

**கே:** - இரவும், பகலும் சிந்திக்கத்தக்கது எது?
**ப:** - ஈச்வரனது பாதாரவிந்தங்களே - ஸம்ஸாரமல்ல.
**கே:** - கண்ணிருந்தும் குருடர்களாயிருப்போர் யாவர்?
**ப:** - நாஸ்திகர்களான மனிதர்கள்.

**க: பங்கு3ரிஹ ப்ரதி2த:?**
**வ்ரஜதி ச யோ வார்த4கே தீர்த3ம் ।**
**கிம் தீர்த2மபி ச முக்2யம்?**
**சித்தமலம் யந்நிவர்தயதி ॥** 34

**கே:** - முடவன் யார்?
**ப:** - முதிர்ந்த வயதில் தீர்த்த யாத்திரை போகிறவன். (முதுமைக்குள் ஒருவன் தான் உள்ள விடத்திலேயே, தன் உள்ளத்திலேயே இறைவனை உணர வேண்டுமேயன்றி, அதற்கு ஆரம்பமாக, இளமையில் மேற்கொள்ள வேண்டிய தீர்த்தயாத்திரையை முதுமையின் போது மேற்கொள்வதில் பலனிராது.)
**கே:** - முக்யமான தீர்த்தம் எது?
**ப:** - சித்தத்திலுள்ள அழுக்கை எது நீக்குகிறதோ அதுதான்.

**கிம் ஸ்மர்தவ்யம் புருஷை:?**
**ஹரிநாம ஸதா3, ந யாவநீ பாஷா ।**
**கோ ஹி ந வாச்ய: ஸுதியா?**
**பரதோ3ஷச்சாந்ருதம் தத்3வத் ॥** 35

**கே:** - மனிதர்களால் ஸ்மரிக்கத்தக்கது எது?
**ப:** - எப்பொழுதும் ஹரிநாமமே. யவனரின் பாஷையல்ல. (பழங்காலத்தில் கிரேக்க மொழியிலிருந்த பற்றுதலைப்பற்றி ஸ்ரீ ஆசார்யாள் கூறுகிறார்.)
**கே:** - நல்ல புத்தியுடையவனால் சொல்லத்தகாதது எது?
**ப:** - பிறரது குற்றமும், அஸத்யமும்.

**கிம் ஸம்பாத்3யம் மநுஜை:?**
**வித்3யா வித்தம் ப4லம் யச: புண்யம்**
**க: ஸர்வகு3ணவிநாசீ?**
**லோப4: சத்ருச்ச க:? காம: ॥** 36

**கே:** - மனிதர்களால் ஸம்பாதிக்கத்தக்கது எது?
**ப:** - கல்வி, செல்வம், வலிமை, புகழ், புண்யம் ஆகியன.
**கே:** - ஸகல குணங்களையும் அழிப்பது எது?
**ப:** - லோபம். (கருமித்தனம்.)
**கே:** - பகைவன் எவன்?
**ப:** - காமம்.

**கா ச ஸபா4 பரிஹார்யா?**
**ஹீநா யா வ்ருத்3த4ஸசிவேந ।**
**இஹ குத்ராவஹித: ஸ்யாந்**
**மநுஜ:? கில ராஜஸேவாயாம் ॥** 37

**கே:** - எந்த (ராஜாங்க) ஸபையை விலக்க வேண்டும்?
**ப:** - வயது முதிர்ந்த மந்திரிகள் இல்லாத ஸபையை.
**கே:** - இவ்வுலகில் மனிதன் எவ்விஷயத்தில் ஜாக்கிரதையுடன் இருக்கவேண்டும்?
**ப:** - ராஜ சேவை செய்வதில்.

**ப்ராணாத3பி கோ ரம்ய:**
**குலத4ர்ம: ஸாது4 ஸங்க3ச்ச ।**
**கா ஸம்ரக்ஷ்யா? கீர்த்தி:**
**பதிவ்ரதா நைஜபு4த்3தி4ச்ச ॥** 38

**கே:** - பிராணனைவிடப் பிரியமானது எது?
**ப:** - குலதர்மமும், ஸாதுக்களின் சேர்க்கையும்.
**கே:** - ரட்சிக்கத்தக்கன யாவை?
**ப:** - கீர்த்தியும், கற்புள்ளவளும், சுயபுத்தியுமாம்.

**கா கல்பலதா லோகே**
**ஸச்சி3ஷ்யாயார் பிதா வித்3யா ।**
**கோ(அ)க்ஷயவடவ்ருக்ஷ: ஸ்யாத்?**
**விதி4வத் ஸத்பாத்ரத3த்ததா3நம் யத் ॥** 39

**கே:** - லோகத்தில் கற்பகக் கொடியாக உள்ளது எது?
**ப:** - ஸத் சிஷ்யனுக்கு அளிக்கப்படும் கல்வி.
**கே:** - அக்ஷயவடம் போன்றது (ஆல்போல் தழைப்பது) எது?
ப: - விதிப்படி ஸத்பாத்திரத்தில் கொடுக்கப்படும் தானம்.

**கிம் சஸ்த்ரம் ஸர்வேஷாம்?**
**யுக்தி:, மாதா ச கா? தே[4]நு: ।**
**கிம் நு ப[3]லம்? யத்[3] - தை[4]ர்யம்,**
**கோ ம்ருத்யு:? யத[3]வதா[3]நரஹிதத்வம் ॥** **40**

**கே:** - யாவர்க்குமான ஆயுதம் எது?
**ப:** - யுக்தி. (நியாயபூர்வமாக நிரூபணம் செய்யக்கூடிய சக்தி.)
**கே:** - (எல்லோருக்கும்) தாயார் யார்?
**ப:** - பசு, (தன் கன்றுகளுக்குப் பால் கொடுப்பதோடு, இதரருக்கும் பால் கொடுக்கும் தாய் பசுவே).
**கே:** - எது வலிமை?
**ப:** - தைரியம்.
**கே:** - எது யமன்?
**ப:** - கவனக்குறைவு.

**குத்ர விஷம்? து[3]ஷ்டஜநே,**
**கிமிஹாசௌசம் ப[4]வேத்? ருணம் ந்ருணாம் !**
**கிமப[4]யமிஹ? வைராக்[3]யம்,**
**ப[4]யமபி கிம்? வித்தமேவ ஸர்வேஷாம் ॥** **41**

**கே:** - விஷம் எங்கு இருக்கிறது?
**ப:** - துஷ்ட ஜனங்களிடத்தில்
**கே:** - தீட்டு எது?
**ப:** - கடன். (கடன்காரனிடமிருந்து மனிதர் விலகுகின்றனர். தீட்டு என்பதும் ஸமூஹ விலக்குத்தானே?)
**கே:** - அபயம் (பயப்படவேண்டாத நிலைமை) எது?
**ப:** - வைராக்கியம். (ஆசையை விடுதல்)
**கே:** - எது பயம்?
**ப:** - எவருக்கும் பணம் தான் (பயத்துக்குக் காரணமாகிறது).

**கா துர்லபா[4] நராணாம்?**
**ஹரி[4]பக்தி:, பாதகம் ச கிம்? ஹிம்ஸா ।**
**கோ ஹி ப[4]கவத்ப்ரிய: ஸ்யாத்?**
**யோ(அ)ந்யம் நோத்[3]வேஜயேத[3]நுத்[3]விக்[3]ந: ॥** **42**

**கே**: - நரர்களுக்குத் துர்லபமானது எது?
**ப**: - ஹரிபக்தி.
**கே**: - எது பாதகம்?
**ப**: - இம்சித்தல்.
**கே**: - பகவானுக்கு யாரிடத்தில் பிரியம் உண்டாகிறது? -
**ப**: - தானும் கவலைப்படாமல் பிறருக்கும் கவலை உண்டாக்காதவனிடத்தில்.

**கஸ்மாத் ஸித்$^{3}$தி$^{4}$:? தபஸ:**
**புத்$^{3}$தி$^{4}$: க்வ நு? பூ$^{4}$ஸுரே, குதோ பு$^{3}$த்$^{3}$தி$^{4}$:?**
**வ்ருத்$^{3}$தோ$^{4}$பஸேவயா, கே**
**வ்ருத்$^{3}$தா$_{4}$:? யே த$^{3}$ர்மதத்வஜ்ஞா: ||** 43

**கே**: - எதனால் (காரிய சித்தி (உண்டாகிறது)?
**ப**: - தபஸினால் (ஒருமுக மனத்தோடு செயற்படுதலே தபஸ்.)
**கே**: - புத்தி எங்கு இருக்கிறது?
**ப**: - அந்தணனிடத்தில்.
கே: - நிஜமான புத்தி எங்கிருந்து வரும்? (அதாவது எப்படி வரும்?)
**ப**: - பெரியோரை அடுத்துப் பணிவிடை செய்து. (செய்வதால்.)
**கே**: - பெரியோர் யார்?
**ப**: - தர்ம தத்துவங்களை அறிந்தவர்கள். (அவர்கள் வயதில் சிறியோராக இருப்பினும் பெரியோரே.)

**ஸம்பா$^{4}$விதஸ்ய மரணாத்**
**அதி$^{4}$கம் கிம்? துர்யசோ ப$^{4}$வதி |**
**லோகே ஸுகீ$^{2}$ ப$^{4}$வேத் கோ?**
**த$^{4}$நவான், த$^{4}$நமபி ச கிம்? யதச் சேஷ்டம் ||** 44

**கே**: - மதிப்புடையவனுக்கு மரணத்தைக்காட்டிலும் எது பெரிது?
**ப**: - அபகீர்த்தி.
**கே**: - எவன் ஸுகி (இன்புறுவான்)?
**ப**: - தனவான்.
**கே**: - தனம் என்பது எது?
**ப**: - எதனால் இஷ்டஸித்தி உண்டாகுமோ அது.

**ஸர்வஸுகா$^{2}$நாம் பீ$^{3}$ஜம்**
**கிம்? புண்யம். து$^{3}$: க$^{2}$மபி குத:? பாபாத் |**
**கஸ்யைச்வர்யம்? ய: கில**
**சங்கரமாராத$^{4}$யேத்$^{3}$ ப$^{4}$க்த்யா ||** 45

**கே**: - எல்லா ஸுகத்துக்கும் மூலம் எது?
**ப**: - புண்யம்.

**கே**: - துக்கம் எங்கிருந்து வருகிறது?
**ப**: - பாபத்திலிருந்து.
**கே**: - ஐசுவரியம் யாருக்கு (உண்டாகும்)?
**ப**: - சங்கரனைப் பக்தியுடன் ஆராதிப்பவனுக்கு.

**கோ வர்த4தே? விநீத:**
**கோ வா ஹீயேத? யோ த்3ருப்த: ।**
**கோ ந ப்ரத்யேதவயோ?**
**ப்3ருதே யச்சாந்ருதம் சச்வத் ॥** 46

**கே**: - எவன் முன்னுக்கு வருவான்?
**ப**: - விநயமுடையவன்.
**கே**: - எவன் க்ஷணமடைவான்?
**ப**: - கர்வமுள்ளவன்.
**கே**: - எவனை நம்பக்கூடாது?
**ப**: - எப்பொழுதும் பொய் சொல்பவனை.

**குத்ராந்ருதே(அ)ப்யபாபம்?**
**யச்சோக்தம் த4ர்மரக்ஷார்த2ம் ।**
**கோ த4ர்ம:? அபி4மதோ ய:**
**சிஷ்டாநாம் நிஜகுலீநாநாம் ॥** 47

**கே**: - பொய் சொல்வது எப்பொழுது பாபமல்ல?
**ப**: - தர்மத்தை ரக்ஷிப்பதற்காகச் சொல்லப்படும் பொழுது.
**கே**: - எது தர்மம்?
**ப**: - நமது வம்சத்தில் பிறந்த பெரியோர்களில் சிஷ்டர்கள் அநுஷ்டித்ததே.

**ஸாது4ப3லம் கிம்? தை3வம்,**
**க: ஸாது4:? ஸர்வதா3 துஷ்ட: ।**
**தை3வம் கிம்? யத் ஸுக்ருதம்,**
**க: ஸுக்ருதீ? சலாக்யதே ச யஸ் - ஸத்3பி4: ॥** 48

**கே**: - ஸாதுவுக்கு பலம் யார்?
**ப**: - தெய்வம்.
**கே**: - ஸாது யார்?
**ப**: - எப்பொழுதும் (ஸந்) துஷ்டியுடன் இருப்பவன். (திருப்தியாக மகிழ்ந்திருப்பவன்.)
**கே**: - தெய்வம் என்பது என்ன?
**ப**: - அவரவர் செய்த புண்ய காரியமே.
**கே**: - புண்ய கார்யம் செய்தவன் யார்?
**ப**: - ஸாதுக்களால் சிலாகிக்கப்படுகிறவன்.

**க்3ருஹமேதி4நச்ச மித்ரம்**
**கிம்? பா4ர்யா, கோ க்3ருஹீ ச? யோ யஜதே ।**
**கோ யஜ்ஞோ? ய: ச்ருத்யா**
**விஹித: ச்ரேயஸ்கரோ ந்ருணாம் ॥** 49

**கே:** - கிரஹஸ்தாசிரமத்தினனுக்கு எது நட்பு?
**ப:** - மனைவி.
**கே:** - கிருஹஸ்தன் யார்?
**ப:** - யஜ்ஞங்களைச் செய்கிறவன்.
**கே:** - யஜ்ஞம் என்பது என்ன?
**ப:** - செய்யப்படவேண்டியது என்று வேதத்தால் எது விதிக்கப்பட்டு. நமக்கு சிரேயஸ்ஸைத் தருகின்றதோ, அது தான்.

**கஸ்ய க்ரியா ஹி ஸப2லா?**
**ய: புநராசாரவாந் - சிஷ்ட: ।**
**க: சிஷ்டோ? யோ வேத3**
**ப்ரமாணவாந், கோ ஹத:? க்ரியாப்4ரஷ்ட: ॥** 50

**கே:** - கர்மாநுஷ்டானங்கள் எவனுக்குப் பலிக்கும்?
**ப:** - ஆசாரமுள்ளவனாகவும், சிஷ்டனாகவும் இருப்பவனுக்கு.
கே: - யார் சிஷ்டன்?
**ப:** - வேதத்தைப் பிரமாணமாகக் கொண்டவன்.
**கே:** - எவன் (இருந்தும்) செத்தவன்?
**ப:** - (சாஸ்த்ரம் விதித்த) கர்மாக்களைச் செய்யாதவன்.

**கோ த4ந்ய:? ஸந்யாஸீ,**
**கோ மாந்ய:? பண்டி3தஸ் ஸாது4: ।**
**கஸ்ஸேவ்ய:? யோ தா3தா,**
**கோ தா3தா? யோ(அ)ர்தி2த்ருப்திமாதநுதே ॥** 51

**கே:** - எவன் தந்யன் (செல்வந்தன். அதாவது பாக்யவான்)?
**ப:** - ஸந்நியாஸி.
**கே:** - எவன் மதிக்கப்படுகிறவன்?
**ப:** - (அறிவில்) பண்டிதனாகவும் (இதயத்தில்) நல்லவனாகவும் இருப்பவன்.
**கே:** - எவன் பணிவிடைக்குரியவன்?
**ப:** - வள்ளல்.
**கே:** - வள்ளல் யார்?
**ப:** - யாசிப்பவனுக்குத் திருப்தி செய்து வைப்பவன்.

**கிம் பா4க்3யம் தே3ஹவதாம்?**
**ஆரோக்3யம் க: ப2லி? க்ருஷிக்ருத் ।**
**கஸ்ய ந பாபம்? ஜபத4:**
**க: பூர்ணோ? ய: ப்ரஜாவாந் ஸ்யாத் ॥** 52

**கே:** - உடலெடுத்தவருக்கு பாக்கியம் எது?
**ப:** - ஆரோக்கியம்.
**கே:** - எவன் பயன் படைத்தவன்?
**ப:** - உழவு செய்பவன். ('உழுதுண்டு வாழ்வோரே வாழ்வர்" என்பதாகக் கொள்ளலாம். அல்லது உவமையாக, விடாமுயற்சி செய்கிறவன் எனக் கருதலாம்.)
**கே:** - பாபம் யாருக்கு இல்லை?
**ப:** - ஜபம் செய்கிறவனுக்கு.
**கே:** - நிறைந்தவன் யார்?
**ப:** - நல்ல பிள்ளைகளை உடையவன்.

**கிம் து3ஷ்கரம் நராணாம்?**
**யந் மநஸோ நிக்3ரஹஸ் - ஸததம் ।**
**கோ ப்3ரஹ்மசர்யவாந் ஸ்யாத்?**
**யச்சாஸ்க2லிதோர்த்4வரேதஸ்க: ॥** 53

**கே:** - மனிதர்க்கு வியலாதது எது?
**ப:** - இடைவிடாமல் மனதை கட்டிப்போடுவதே.
**கே:** - எவன் பிரம்மசாரி?
**ப:** - ஊர்த்துவ ரேதஸ்ஸுடையவன். (வீர்யத்தைக் கீழ்முகமாகச் சிந்தாமல் மேல்முகமாக ஏற்றியவன்.)

**கா ச பரதே3வதோக்தா?**
**சிச்2சக்தி:, கோ ஜக3த்ப4ர்தா? ।**
**ஸூர்ய:, ஸர்வேஷாம் கோ**
**ஜீவநஹேது:? ஸ பர்ஜந்ய: ॥** 54

**கே:** - பர வதை யார்?
**ப:** - ஞானசக்தியான அம்பிகை.
**கே:** - உலகைத் தாங்குகிறவன் யார்?
**ப:** - சூரியன்.
**கே:** - (உலக) ஜீவனத்துக்குக் காரணம் எது?
**ப:** - மழை.

**க: சூரோ? யோ பீ⁴த**
**த்ராதா, த்ராதா ச க:? ஸ கு³ரு: |**
**கோ ஹி ஜக³த்குருருக்த:?**
**சம்பு:, ஜ்ஞாநம் குத:? சிவாதே³வ ||** 55

**கே:** - சூரன் யார்?
**ப:** - பயப்பட்டவனை ரட்சிக்கிறவன்.
**கே:** - ரட்சிக்கிறவன் யார்?
**ப:** - குரு.
**கே:** - ஜகத்குரு யார்?
**ப:** - சம்பு. (நித்யானந்த மூலமே சம்பு எனும் சிவபெருமான்.)
**கே:** - ஞானம் எங்கிருந்து கிடைக்கும்?
**ப:** - சிவனிடமிருந்தே.

**முக்திம் லபே⁴த கஸ்மாத்?**
**முகுந்த3ப4க்தே:, முகுந்த3: க:? |**
**யஸ்தாரயேத3வித்யாம்,**
**கா சாவித்3யா? யதா3த்மநோ(அ)ஸ்பூ2ர்தி: ||** 56

**கே:** - மோக்ஷம் எவ்வாறு உண்டாகும்?
**ப:** - முகுந்த பக்தியால்.
**கே:** - முகுந்தன் யார்?
**ப:** - அவித்யைக் கடக்க வைப்பவன்.
**கே:** - அவித்யை என்ன?
**ப:** - ஆத்மாவின் விளக்கமின்மை.

**கஸ்ய நீ சோகோ? ய:. ஸ்யாத்**
**அக்ரோத⁴: கிம் ஸுக²ம்? துஷ்டி: |**
**கோ ராஜா? ரஞ்ஜநக்ருத்,**
**கச்ச ச்வா? நீசஸேவகோ யஸ் ஸ்யாத் ||** 57

கே : - யாருக்குத் துக்கம் இல்லை?
ப : - கோபமற்றவனுக்கு.
கே : - ஸுகம் எது?
ப : - திருப்தி.
கே : - ராஜா யார்?
ப : - ரஜ்ஜனம் (மகிழ்ச்சி) ஊட்டுகிறவன்.
கே : - நாய் யார்? ப : - நீசனுக்குத் தொண்டு செய்யவன்.

**கோ மாயீ? பரமேச:,**
**க இந்த்[3]ரஜாலாயதே? ப்ரபஞ்சோ(அ)யம் |**
**க: ஸ்வப்நநிபோ[4]? ஜாக்[3]ரத்[3]**
**வ்யவஹார:, ஸத்யமபி ச கிம்? ப்[3]ரஹ்ம || 58**

**கே: -** மாயையை உடையவன் (மாயைக்கு ஆதாரமாக அதை அடக்கி ஆள்பவன்) யார்?
**ப: -** பரமேச்வரன்.
**கே: -** இந்திர ஜாலம் எது?
**ப: -** பிரபஞ்சமே.
**கே: -** கனவுபோன்றது எது?
**ப: -** விழிப்பு நிலையிலுள்ள விவகார (உலக) ம்.
**கே: -** ஸத்யம் எது?
**ப: -** ப்ரஹ்மம்.

**கிம் மித்[2]யா? யத்[3]வித்[2]யா**
**நாசயம், துச்ச[2]ம் து? சசவிஷாணாதி[3] |**
**கா சாநிர்வசநீயா?**
**மாயா, கிம் கல்பிதம்? த்[3]வைதம் || 59**

**கே: -** மித்யை (கீழ்நிலையில் உண்மை போலிருந்து, மேல் நிலையில் பொய்யாவது) எது?
**ப: -** ஞானத்தினால் நாசமாவது. (அதாவது விவகார உலகம். முந்தைய ச்லோகத்துடன் இதைச் சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டும். விழிப்பி லேயே நாம் உணர்வதால் விவகார உலகம் தெரிந்தாலும், இதற்கு மேல் நிலையான ஞானத்தில் இவ்வுலகு பொய்யாக மறைந்துவிடும்.)
**கே: -** துச்சம் (சூன்யம்) எது
**ப: -** முயற்கொம்பு முதலியன. (முயலின் கொம்பு ஒரு நிலையிலுமே இல்லாத முழுப்பொய். அத்யந்த அஸத்)
**கே: -** (நிஜம் பொய் என்று) சொல்ல முடியாதது எது?
**ப: -** மாயை.
**கே: -** அதனால் கற்பிக்கப்படுவது என்ன?
**ப: -** த்வைதம். (ப்ரம்மம் வேறு, ஜீவன் வேறு என்ற எண்ணம்.)

**கிம் பாரமார்திக[2]ம் ஸ்யாத்?**
**அத்[3]வைதம், சாஜ்ஞதா குதோ?(அ)நாதி[3]: |**
**வபுஷச்ச போஷகம் கிம்?**
**ப்ராரப்[3]த[4]ம், சாந்நதா[3]யி கிம்? சாயு: || 60**

**கே: -** எது பாரமார்த் திகம்? (உயர்பொருள் படைத்தது)
**ப: -** அத்வைதம். (ப்ரம்மமும், ஜீவனும் இரண்டல்ல, ஒன்றே என்பது.)

**கே:** - (இவற்றை வெவ்வேறாக எண்ணும்) அஞ்ஞானம் எதனால் உண்டாகிறது?

**ப:** - அதற்கு ஆதி இல்லை. (எனவே அதை உண்டாவதாகவே சொல்வதற்கில்லை.)

**கே:** - உடம்புக்குப் போஷணை கொடுப்பது எது? (போஷணை என்பது இங்கு உடம்பைவைத்து ஆட்டுவதையே குறிக்குமேயன்றி, அதற்கு நல்ல ஊட்டமளிப்பதை மட்டுமல்ல.)

**ப:** - பிராரப்தம் என்னும் கர்மம்.

**கே:** - அன்னத்தைக் கொடுப்பது யாது?

**ப:** - ஆயுள். அன்னம் ஆயுளைக் கொடுப்பதாகத் தோன்றினாலும், கர்மப்படி ஆயுள் விதிக்கப்பட்டுள்ளவரையே, அன்னம் ஜீர்ணமாகிப் போஷிக்கும்.)

**கோ ப்$^{3}$ராஹ்மணைருபாஸ்யோ? -**
**கா$^{3}$யத்ர்யர்க்காக்$^{3}$நிகோ$^{3}$சர: சம்பு$^{4}$: ।**
**கா$^{3}$யத்ர்யாமாதி$^{3}$த்யே**
**சாக்$^{3}$நௌ சம்பௌ$^{4}$ ச கிம் நு? தத் தத்வம் ॥** 61

**கே:** - பிராம்மணனால் உபாஸிக்க வேண்டியது யார்?

**ப:** - காயத்ரி, சூரியமண்டலம், அக்னி இவற்றில் கோசாரமாகவுள்ள (புலனாகின்ற) சம்புவை.

**கே:** - காயத்ரி, சூரியன், அக்னி, சம்பு இவர்களிடத்தில் உள்ளது என்ன?

**ப:** - தத் (எனும் ப்ரஹ்ம) தத்துவம்.

**ப்ரத்யக்ஷதே$^{3}$வதா தா?**
**மாதா, பூஜ்யோ கு$^{3}$ருச்ச க:? தாத: ।**
**க: ஸர்வதே$^{3}$வதாத்மா?**
**வித்$^{3}$யாகர்மாந்விதோ விப்ர: ॥** 62

**கே:** - பிரத்தியக்ஷ தேவதை யார்?

**ப:** - தாயார்.

**கே:** - பூஜிக்க வேண்டிய குரு யார்?

**ப:** - தகப்பனார்.

**கே:** - ஸகல தேவஸ்வரூபி யார்?

**ப:** - ஞான கர்மஸித்தியுடைய பிராம்மணன்.

**கச்ச குலக்ஷயஹேது:?**
**ஸந்தாப: ஸஜ்ஜநேஷு யோ(அ)காரி ।**
**கேஷாமமோக$^{4}$வசநம்?**
**யே ச புந: ஸத்யமௌநசமசீலா: ॥** 63

**கே:** - குலநாசத்துக்குக் காரணம் எது?

**ப:** - ஸாது ஜனங்களுடைய உள்ளத்தில் தாபத்தை உண்டாக்கும் கெட்ட செய்கை.

**கே:** - யாருடைய சொல் தவறாமல் பலிக்கும்?
**ப:** - ஸத்தியம், மௌனம், மனவடக்கம் ஆகிய சீலங்களை உடையவர் சொல்.

**கிம் ஜந்ம? விஷயஸங்க[3]:,**
**கிமுத்தரம் ஜந்ம? புத்ர : ஸ்யாத் ।**
**கோ(அ)பரிஹார்யோ? ம்ருத்யு:,**
**குத்ர பத[3]ம் வித்யஸேச்ச? த்[3]ருக்பூதே ॥** 64

**கே:** - ஜன்மத்துக்கு காரணம் யாது?
**ப:** - விஷயத்தில் பற்று.
**கே:** - மேல்ஜன்மம் எது?
**ப:** - புத்திரன்.
**கே:** - பரிஹாரம் செய்ய முடியாதது எது?
**ப:** - சாவு.
**கே:** - காலை எங்கே வைக்க வேண்டும்?
**ப:** - கண்ணுக்குப் பரிசுத்தம் என்று தெரிந்த இடத்தில். (தூய ஒழுக்கத்தில் நடக்க வேண்டும்.)

**பாத்ரம் கிமந்நதா[3]நே?**
**க்ஷுதி[3]தம், கோ(அ)ர்ச்யோ ஹி? ப[4]க[3]வத[3]வதார: ।**
**கச்ச ப[4]க[3]வான்? மஹேச:**
**சங்கரநாராயணாத்மைக: ॥** 65

**கே:** - அன்ன தானத்திற்குப் பாத்திரன் யார்?
**ப:** - பசியுள்ளவன்.
**கே:** - யாரை அர்ச்சிக்கவேண்டும்?
**ப:** - பகவத் அவதாரத்தை.
**கே:** - பகவான் யார்?
**ப:** - சங்கரனும் நாராயணனுமாகிய ஒரே பெரிய ஈசன்.

**ப[2]லமபி ப[4]க[3]வத்ப[4]க்தே:**
**கிம்? தல்லோகஸ்வரூபஸாக்ஷாத்வம் ।**
**மோஷச்ச கோ? ஹ்யவித்[3]யாஸ்தமய:**
**க: ஸர் வேத[3]பூ[4]:? அத[2]சோம் ॥** 66

**கே:** - பகவத் பக்திக்குப் பலன் எது?
**ப:** - அவனுடைய லோகம், ஸ்வரூபம் இவற்றின் ஸாக்ஷாத்காரம் (ப்ரத்யக்ஷ அநுபவம்).
**கே:** - மோக்ஷம் எது?
**ப:** - அவித்யை அழிதல்.
**கே:** - ஸகல வேதங்களுக்கும் உற்பத்தி(யும் லயமும்) எது?

ப: - ஓம்.

**இத்யேஷா கண்ட[2] ஸ்தா[2]**
**ப்ரச்நோத்தாரரத்நமாலிகா யேஷாம் ।**
**தே முக்தாப[4]ரணா இவ**
**விமலாச்சாபா[4]ந்தி ஸத்ஸமாஜேஷு ॥** 67

இந்தப் பிரச்நோத்தர ரத்நமாலையைக் கழுத்தில் (கருத்தில்) தரித்தவர்கள் முக்தாபரணங்கள் (முக்தர்களுக்குள் சிறந்தவர்) போல், நிர்மலமாக நலலோர் நிறைந்த ஸபைகளில் பிரகாசிப்பார்கள்.

